12th September 1958]

*Property tax*

* 191 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether a satyagraha is going on before the municipal office in Bodinayakanur, Periyakulam taluk, since 29th March 1958 protesting against the enhanced house and property tax levied by the Municipality; and

(*b*) what action the Government propose to take in the matter?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) A satyagraha was staged by the Communist Party from 29th March to 2nd April 1958 in front of the Municipal Office, Bodinayakanur, protesting against the enhancement of property tax by the Municipal Council. The Satyagraha was withdrawn after a settlement was effected by the Chairman and Councillors of the Municipal Council.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware of the fact that in every quinquennial revision, the property tax is raised sometimes by even 300 per cent?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The main question relates to Bodinayakanur and therefore, the hon. Member may put a separate question.

SRI N. R. THIAGARAJAN : முனிசிபல் தேர்தல்கள் சமீபத்தில் வருகிறது என்பதற்காக இந்த 'ஸ்டண்டு' நடத்தப்பட்டது. தேர்தல் இப்பொழுது ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. இனிமேல் இந்தப் பிரச்னைக்கு இடமில்லை என்பது சர்க்காருக்கு தெரியுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : முனிசிபல் தேர்தல் 'ஸ்டண்டு' என்று நான் ஒன்றும் கேள்விப்படவில்லை. ஆகையால், வேறு எந்தவிதமாகவும் நடந்திருக்கலாம்.

SRI K. VINAYAKAM : Sir, was the enhancement of the house tax levied according to the rules and regulations that have been prescribed by the Government, as far as the Bodinayakanur Municipality was concerned?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Because of the enhancement, the troubles arose. Then the concerned parties led a deputation and they came to an agreement. Now the troubles are all over.

SRI P. U. SHANMUGAM : இந்த வரி உயர்வு சர்க்கார் அனுமதி பெற்று செய்யப்பட்டிருக்கிறதா ? அப்படியானால் அந்த உயர்ந்த அளவு வாபஸ் பெறப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இந்த இடத்திலுள்ள செலவு அதிகமாக இருந்ததால் வரி உயர்த்தப்பட்டது. ஆனால், அந்த செலவு உடனடியாக செய்யப்படாததனால், அது கூடுதல் என்று அந்த இடத்தில் உள்ள பலரும் சொன்னார்கள். இன்னும் அதைத் தொடர்ந்து தூது கோஷ்டி ஒன்று வந்து அதைச்

[12th September 1958

சரிவர செய்வதற்கு ஒரு முறையையும் தெரிவித்திருக்கிறார்கள். இப்பொழுது பஞ்சாயத்து போர்டு தலைவரின் ரிபோர்ட்டை எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்கிறோம். அதன் பிறகு எல்லாம் சரிப்படுத்தப்படும்.

SRI K. ANBAZHAGAN : முனிசிபாலிடிகளில் வீடுகளுக்கு வரியை தீர்மானிப்பதில் ஒரு திட்டவட்டமான கொள்கை அரசாங்கத்திற்கு இருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் கருதுகிறார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஆம், கருதுகிறேன்.

SRI A. A. RASHEED : What is the percentage of enhancement made by the Bodinayakanur Municipality ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Two per cent.

*Indigenous system of medicine*

* 194 *Q*.—SRI P. G. MANICKAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் நாட்டு வைத்திய முறைகளைக் குறித்து ஆராய்ச்சி செய்வதற்கான நிலையங்களை ஏற்படுத்துவதற்காக உதவி செய்ய வேண்டுமென்று இந்திய சர்க்காருக்கு சென்னை சர்க்கார் தெரிவித்துக் கொண்ட திட்டத்திற்கு இந்திய சர்க்காரிடமிருந்து கிடைக்கப்பட்ட பதில் விவரம் யாவை ?

(ஆ) இத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவருவதற்காகச் சென்னை சர்க்காரால் எடுக்கப்பட்டுவரும் நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The Government of India suggested that research may be conducted in the College and Hospital of Integrated Medicine, Madras, on certain specific diseases like asthma, diabetes, etc., with 50 beds. A grant of Rs. 2,000 per bed per annum has also been sanctioned.

(*b*) This Government have sanctioned the implementation of the scheme with the necessary staff, equipment, etc.

SRI P. G. MANICKAM : இவ்வாறு நாட்டு வைத்திய முறையைப்பற்றி ஆராய அரசாங்கம் விரும்பினால், அந்த ஆராய்ச்சியை தேர்ச்சி பெற்ற தமிழ் நாட்டு வைத்தியர்களைக் கொண்டு நடத்துவார்களா ? எந்தெந்த விதமான மருந்துகளை அவர்கள் செய்கிறார்கள், எந்தெந்த வியாதிகளுக்கு எந்தெந்த மருந்துகளை கொடுக்கிறார்கள் என்ற பரிசீலனையை அரசாங்கம் நடத்துமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இம்மாதிரியான பரிசீலனை செய்வதற்காகத்தான் இந்த திட்டம்.

SRI K. ANBAZHAGAN : இந்திய மருத்துவ முறைகளில் சிறப்பான சித்த வைத்தியத்தைக் குறித்து தமிழ் நாட்டில் ஓர் ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்த வேண்டும் என்று பலரும் விரும்பி அரசாங்கத்தை கேட்டிருக்கிறார்களா ? அவ்வகையான ஓர் ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்தப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதற்காக ஒரு தனி ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்தவில்லை. அதற்கு முன்னால் நான் சொன்ன அளவிலே இப்பொழுது ஆராய்ச்சி செய்யப்படுகிறது. அது விஸ்தரிக்கப்படும்பொழுது அது பற்றி யோசிக்கப்படும்.